# திருப்புகழமிர்தம்






ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை

கீலக யுதவு பரிமள மதுகர வெகுவித மாசி

வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

உ

காங்கேய நல்லூர்

## ஸ்ரீ முருகப் பெருமான் திருக்கோயில்

# இலக்ஷதீப நல்விழா

## 9-3-1969 ஞாயிற்றுக்கிழமை

**நிகழ்ச்சிகள் விவரம்**

மாலை 3 மணிக்கு மகாபிஷேகம்

4 ,, சரவணப் பொய்கை திறப்பு விழா

தலைவர் : அறநிலையப்பாதுகாப்பு துணைத் தலைவர், திரு K. ராஜா அவர்கள்

திறந்து வைப்பவர் : திரு. A. S. அருணசலம்பிள்ளை அவர்கள்
திரு. திருப்புகழ்மணி அவர்கள் 'சரவணப் பொய்கை' என்பது பற்றிப் பேசுவார்கள்.

மாலை 6 மணி தீபதரிசனம்

,, 7 மணி தருமபுர ஆதீனம் திரு. சுவாமிநாதன் அவர்கள் தேவார பாராயணம்

இரவு 8 மணி. திரு. திருமுருக கிருபானந்தவாரி அவர்களால் 'நளாயணி' பற்றி சொற்பொழிவு.

,, 10 மணி சுவாமிபுறப்பாடு, கோபுர தரிசனம், திருவீதியுலா புதுச்சத்திரம் 'நாதஸ்வர இன்னிசை வாரிதி' திரு. P. K. முத்து வீருசாமி பார்ட்டியாரால்—நாதஸ்வரம், தேவார பாராயணம், சரவணப்பொய்கை சுற்றுலா. 10-3-69 திங்கள் காலை கோயிலில் ஏகாந்த சேவை தவன உற்சவம்.

அன்பர்கள் அனைவரும் பெருமானைச் சேவித்து இன்புறவேண்டுகின்றோம்.

**இலக்ஷதீப உபயதாரர்கள்**

---

## அன்பர்கள் கவனத்துக்கு

நமது காரியாலயத்துக்கோ, ஆசிரியருக்கோ எழுதப்படும் கடிதங்களுக்குப் பதிலை விரும்புவோர் பதிலுக்காக கார்டோ, தபால் தலைகளோ அனுப்பினலொழிய பதிலனுப்ப வசதிப்படாது.

**மானேஜர், திருப்புகழமிர்தம்**

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 33 | கீலக ஹூ—மாசி மீ பிப்ரவரி 1969 | இதழ் 11

## திருப்புகழ்

### திருவருணை

கயல்விழித் தேனெனச் செயலழித் தாயெனக்
கணவகெட் டேனெனப் பெருமாது
கருதுபுத் ராஎனப் புதல்வரப் பாஎனக்
கதறிடப் பாடையிற் றலைமீதே

பயில்குலத் தாரழப் பழையநட் பாரழப்
பறைகள்கொட் டாவரச் சமனும்
பரியகைப் பாசம்விட் டெறியுமப் போதெனைப்
பரிகரித் தாவியைத் தரவேணும்

அயிலறச் சேவல்கைக் கினிதரத் தோகையுற்
றருணையிற் கோபுரத் துறைவோனே
அமரரத் தாசிறுக் குமரிமுத் தாசிவத்
தரியசொற் பாவலர்க் கெளியோனே

புயலிளைப் பாறுபொற் சயிலமொய்ச் சாரலிற்
புனமறப் பாவையைப் புணர்வோனே
பொடிபடப் பூதரத் தொடுகடற் சூரனைப்
பொருமுழுச் சேவகப் பெருமாளே.

## பதவுரை

அயில்=வேலாயுதமும், அற சேவல்=தரும நெறியைக் காட்டும் சேவலும், கைக்கு இனிதர=திருக்கரத்தில் இனிது விளங்க, தோகை உற்று=மயிலின் மீது விளங்கி, அருணையில் கோபுரத்து உறைவோனே=திருவண்ணுமலையில் கோபுரவாயிலில் எழுந்தருளியிருப்பவரே! அமரர் அத்தா=தேவர்களுக்குத் தலைவரே! சிறு குரி முத்தா=இளங் குமரியாகிய வள்ளியம்மைக்கு முத்துப் போன்றவரே! சிவத்து அரிய சொல் பாவலர்க்கு=சிவபெருமானை அருமையான சொற்களால் பாடுகின்ற பாவலர்கட்கு! எளியோனே=எளிதாக நின்று அருள் புரிபவரே! புயல் இளைப்பு ஆறும்=மேகங்கள் இளைப்பாறுகின்ற, பொன் சயில்=அழகிய வள்ளிமலையின், மொய் சாரலில்=நெருங்கிய சாரலிலே, புன மற பாவையை=தினைப்புனங் காத்த வேடப் பெண்மணியை, புணர்வோனே=மருவுகின்றவரே! பூதரத்தொடு பொடிபட=மலைகள் பொடியாகுமாறு, கடல் சூரனை பொரு=கடலில் ஒளிந்த சூரபமன்மனைப் போர் செய்து அடக்கிய, முழு சேவக=பரிபூரண ஆற்றலுடைய, பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! கயல் விழித்தேன்=மீன் போன்ற கண்கள் விழித்துப் பணிவிடைகள் செய்தேன், எனை செயல் ஒழித்தாய் என=என்னைச் செயலற்றுப் போம்படிச் செய்துவிட்டீர்களே என்றும், கணவ கெட்டேன் என=“என் கணவரே! நான் இனி அழிந்து போனேன்” என்றும் கூறி மனைவி அழவும், பெறுமாது=பெற்ற தாய், கருது புத்ரா என=என் நினைவிலேயேயுள்ள மகனே என்று புலம்பவும், புதல்வர் அப்பா என கதறிட=பிள்ளைகள் ‘அப்பா’ என்று கதறவும், பாடையில் தலை மீதே=பாடையில் தலைமாட்டுப்பக்கத்தில் நின்று, பயில் குலத்தார் அழ=அன்புடன் பழகிய குலத்தினர் அழவும், பழைய நட்பார் அழ பழைய நண்பர்கள் அழவும், பறைகள் கொட்டாவர=பறைவாத்தியங்கள் கொட்டி வரவும், சமனும்= இயமனும், பரிய கை பாசம் விட்டு எறியும் அப்போது=கருத்த கையிலுள்ள பாசக்கயிற்றை என் மீது விட்டு எறியும் அவ்வேளையில், எனை பரிகரித்து=அடியேனை இயமனிடமிருந்து நீக்கி, ஆவியை தர வேணும்=உயிரைத் தருவீராக.

## பொழிப்புரை

வேலும், அறத்தின் வடிவாய சேவலும், திருக்கரத்தில் இனிது விளங்க, மயிலின்மீது திகழ்ந்து, திருவண்ணுமலையில் திருக்கோபுரவாசலில் எழுந்தருளியிருப்பவரே! தேவர்கட்குத் தலைவரே! இளங்குமரியாகிய வள்ளி பிராட்டிக்கு முத்துப் போன்றவரே! சிவபெருமானை அருமையான செஞ்சொற்களால் இனிது பாடும் புலவர்கட்கு எளியவரே! மேகங்கள்

இளைப்பாறுகின்ற அழகிய வள்ளிமலையின் நெருங்கிய சாரலில் தினைப்புனங்காத்திருந்த குறமகளைத் தழுவுகின்றவரே! மலைகள் பொடியாகவும், கடலில் ஒளிந்த சூரன் அடங்கவும் போர் புரிந்த பேராற்றல் படைத்த பெருமிதம் உடையவரே! "மீன் போன்ற கண் விழித்துப் பணிவிடைகள் எத்தனை நாள் செய்தேன், என்னைச் செயலற்றுப் போம்படிச் செய்துவிட்டீர்களே! என் கணவ! நான் இனி அழிந்துபோவேன்" என்று கூறி மனைவி அழவும், பெற்ற தாய் "என் நினைவில் நீங்காதிருக்கும் மகனே" என்று புலம்பவும், மைந்தர்கள் "அப்பா" என்று கதறியழவும், பாடையில் தலைப்புறம் நின்று, பழகிய குலத்தாரகள் அழவும், பழைய நண்பர்கள் அழவும், பறைகள் கொட்டி வரவும், இயமன் பெரிய கையிலுள்ள பாசக்கயிற்றை என்மீது விட்டு எறியும் அவ்வேளையில், என்னை இயமனிடத்திலிருந்தும் நீக்கிக் காத்து, என் உயிரைத் தந்தருளும்.

## விரிவுரை

**கயல் விழித்தேனெனைச் செயலழித்தா யெனக் கணவ கெட்டேனென:—**

ஒருவன் மாண்டபோது உறவினர் அழுவதை இத்திருப்புகழில் சுவாமிகள் படம்பிடித்துக் காட்டுகின்றார்.

இந்த முதல் அடியில் மனைவியழுவதைக் கூறுகின்றார். மனைவி தோன்ற யெழுவாயாகத் தொக்கி நிற்கின்றது.

கயல் விழித்தேன் - கயல்—மீன். இது உவமஆகு பெயராகக் கண்ணைக் குறிக்கின்றது.

மனைவி கணவன் மாண்டதைக் கண்டு "என் கணவ! பல நாட்கள் கண் விழித்து உமக்குப் பணிவிடை செய்தேனே. தங்களைப் பிரிந்து இனி எனக்கு என்ன செயல் இருக்கின்றது? நான் நலங்களை யிழந்து கெட்டேன்" என்று கூறியழுவாள்.

இனி "கயல் விழித்தேன்" என்ற சொல்லை. கயல் போன்ற கண்ணும், தேன் போன்ற மொழியுமுடைய மனைவி யென்றும் பொருள் காணலாம்.

**பெறுமாது கருதுபுத்ரா என:—**

பெற்ற தாய் மாண்ட மகனைப்பார்த்து மகனே! என் எண்ணமெல்லாம் நீதானே. உன் உணவு உடை வளர்ச்சியாகிய அத்தனையும் நான் நினைத்து நினைத்துச் செய்தேனே! என்னைவிட்டுப் பிரிந்தனையே என்று கூறியழுவாள்.

**புதல்வரப்பாவெனக் கதறிட:—**

பெற்ற பிள்ளைகள் அதிக துன்பத்தினால் சொற்களே அதிகம் வராமல் விம்மி விம்மி "அப்பா! அப்பா!" என்று கூறியழுகின்றார்கள், ஓ என்று கதறியழுகின்றார்கள்.

**பாடையிற்றலைமீதே பயில் குலத்தாரழ:—**

உடம்பைப் பாடைமீது வைத்து தலைப்புறத்தே நின்று பலகாலம் பழகிய உறவினர்கள் கண்ணீர் வடித்து, மாண்டவர் முகத்தைப் பார்த்து அழுவார்கள். பயிலுதல்—பழகுதல்.

நவில்தொறும் நூல்நயம்போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு. —திருக்குறள்.

**பழைய நட்பாரழ:—**

இளமை தொட்டே அன்புடன் பழகிய நண்பர்கள் நட்பின் தகைமையால் அழுவார்கள்.

**பறைகள் கொட்டாவர:—**

பிணப்பறைகள் கொட்டி ஆர்த்து வரும்.

"உறவின்முறை கதறியழ ஊராரு மாசையற
பறைதிமிலை முழவினிசை ஆகாச மீதுமுற
உலகிலுள பலரரிசி வாய்மீதி லேசொரியு மந்தநாளில்"
—திருப்புகழ்.

"இடுகுபறை சிறுபறைகள் திமிலையொடு தவிலறைய
ஈமதேசமே பேய்கள் சூழ்வதாய் எரிதனிலிடு வாழ்வே"
—(அறுகுநுனி) திருப்புகழ்.

**சமனும் பரியனைப் பாசம் விட்டெறியுமப்போது:—**

சமன்—இயமன். ஏழை பணக்காரன், கற்றவன்—கல்லாதவன், இளையவன்—முதியவன், அரசன்—ஆண்டி என்ற எல்லோரையும் சமமாகப் பார்த்து, ஆயுள் முடிந்தவுடன் வருவதால் சமன் எனப் பேர் பெற்றான்.

பாசக் கயிற்றை எறிந்து உயிரைப் பிணித்து உடம்பிலிருந்து உயிரைப் பிரித்துக் கொண்டு போவான்.

"காலனார் வெங்கொடுந் தூதர்பா சங்கொ டென்
காலினார் தந்துடன் கொடுபோகக்
காதலார் மைந்தருந் தாயராருஞ் சுடுங்
கானமே பின்தொடர்ந் தலறாமுன்". —திருப்புகழ்.

**பரிகரித் தாவியைத் தரவேணும்:—**

பரிகரித்தல்—விலக்குதல். இயமன் என் உயிரைக் கவராது விலக்கி, முருகா! என்னைக்காத்து, அடியேன் உயிரைத் தந்தருளவேண்டும்" என்று சுவாமிகள் முருகனிடம் முறையிடுகின்றார்கள்.

'எந்தைநீ யெனை நமன்தமர் நலியின்
இவன்மற்றெ னடியான் எனவிலக்கும்
சிந்தையால் வந்துன் திருவடி யடைந்தேன்
செழும் பொழில் திருப்புன் கூருளானே'' —சுந்தரர்.

''அந்தகனுமெனை யடர்ந்து வருகையினில்
அஞ்சலென வலிய மயில்மேல்நீ
அந்த மறலியொடு கந்த மனித நம
தன்ப னென மொழிய வருவாயே''
—(தந்தபசி) திருப்புகழ்.

**அயிலறச் சேவல் கைக்கினிதரத் தோகையுற்று:—**

அயில்—வேல். அறச்சேவல்—தருமவடிவாக விளங்கும் சேவல். இந்த இரண்டையும் தமது திருக்கரத்தில் முருக வேள் தாங்கிக் கொண்டிருக்கின்றார். மயிலின்மீது ஆரோ கணித்து விளங்குகின்றார்.

இந்த அடியில் வேல் மயில் சேவல் என்ற மூன்றும் ஓதப் பெற்றுள்ளன. இது சிறந்த அடி.

**அருணையில் கோபுரத் துறைவோனே:—**

திருவண்ணாமலையில் இரண்டாவது பிரகாரத்திலுள்ள, வல்லாள மகாராசன் புதுக்கிய கோபுரத்தின் உச்சியிலேறி வீழ்ந்த அருணகிரிநாதரைக் காத்த முருகன் கோபுரத்தின் வடப்புறத்தில் எழுந்தருளி யிருக்கின்றார்.

இந்த மூர்த்தி "கோபுரத்திளையனார்" என்ற பேருடன் வரதராக விளங்குகின்றார் இப்பெருமான் மீது ஆறு திருப் புகழ்ப் பாக்கள் காணப்படுகின்றன.

''அடலருணைத் திருக்கோபுரத்தே யந்த வாயிலுக்கு
வடவருகிற் சென்று கண்டு கொண்டேன்''
—கந்தரலங்காரம்.

**அமரரத்தா:—**

அத்தன்—தலைவன். முருகவேள் மூவர் தேவாதிகட்குத் தனிப் பெருந்தலைவர் ஆதலின் "அமரரத்தா" என்றார்.

தேவர்களாகிய சேனைகட்குத் தலைவனாய் தேவ சேனாபதி யாக நின்றவர் முருகவேள்.

**சிறுக்குமரி முத்தா:—**

இளங் குமரியாகிய வள்ளி நாயகிக்கு முத்துப்போல் திகழ்பவர்.

**சிவத்தரிய சொற்பாவலர்க் கெளியோனே:—**

அருமையான செஞ்சொற்களால், சிவபெருமானைப் பாடு கின்ற பாவாணர்கட்கு முருகன் எளியராக இருந்து அருள் பாலிக்கின்றார்.

இதனால் சிவனே முருகன் என்பது விளங்குகின்றது.

**புயலிளைப்பாறு பொற் சயிலம்:—**

வள்ளி மலை உயர்ந்த மலை. வளமையான மலை. ஆத லால் மேகங்கள் தங்கி இளைப்பாறுகின்றன. பொற் சயிலம்— அழகிய மலை.

**சாரலிற் புனமறப்பாவையைப் புணர்வோனே:—**

வள்ளி மலைப்புறத்தில் தினைப்புனங்காத்த வள்ளிநாயகி யாகிய இச்சா சக்தியைத் தழுவுகின்றவர். ஆன்மகோடிகட்கு அருள்புரியும் திறம் இது எனவுணர்க.

**பொடிபடப்பூதரத் தொடுகடற் சூரனைப் பொரு:—**

பூமியைத் தாங்குவதனால் மலை பூதரம் எனப் பெற்றது. மலையைப் பூமி தாங்குவதாகப் பலர் கருதுவர். உண்மை அது அன்று. மலைதான் பூமியைத் தாங்குகின்றது. பூமியின் கீழ் மலை பரந்து நின்று தாங்குகின்றது.

**''தாரணி தங்கொரு கிரியில் தங்கினர்''** —கம்பர்.

போர்க்களத்தில் சூரபன்மனுக்கு உதவியாக அசுரர்கள் மலைவடிவாகி நின்றார்கள். முருகவேள் வேலை யேவி, அம்மலை களைப் பொடியாக்கிக் கடலில் ஒளிந்த சூரனுடன் போர் புரிந்து அவனுடைய செருக்கையடக்கி யருள் புரிந்தார்.

**முழுச் சேவகனே:—**

பூரணமான பராக்கிரமமுடையவர் முருகவேள். ஆதலின் முழுச சேவகன் என்றார்.

**''வளைகடல் கதற நிசிசரர் மடிய**
**மலையொடு பொருத முழுச் சேவகனே''**
—(இருபிறை) திருவகுப்பு.

கருத்துரை

அருணைமேவும் முழுச் சேவகனே! இயமனிடமிருந்து விலக்கி அடியேனை ஆண்டருள்.

## திருப்புகழ்

கறுவுமிக் காவியைக் கலகுமக் காலனைத்
திலகுகட் சேல்களிப் புடனாடக்
கருதிமுற் பாடுகட் டளையுடற் பேசியுட்
களவினிற் காசினுக் குறவாலுற்

றுறுமலர்ப் பாயலிற் றுயர்விளைத் தூடலுற்
றுயர்பொருட் கோதியுட் படுமாதர்
ஒறுவினைக் கேயுளத் தறிவுகெட் டேனுயிர்ப்
புணையிணைத் தாள்தனைத் தொழுவேனோ

மறையெடுத் தோதிவச் சிரமெடுத் தானுமைச்
செறிதிருக் கோலமுற் றணிவானும்
மறைகள் புக்காரெனக் குவடுநெட் டாழிவற்
றிடஅடற் சூரனைப் பொரும்வேலா

அறிவுடைத் தாருமற் றுடனுனைப் பாடலுற்
றருணையிற் கோபுரத் துறைவோனே
அடவியிற் றோகைபொற் றடமுலைக் காசையுற்
றயருமச் சேவகப் பெருமாளே.

### பதவுரை

மறை எடுத்து ஓதி=வேதங்களை எடுத்து ஓதுகின்ற பிரமதேவனும், வச்சிரம் எடுத்தானும்=வஜ்ஜிராயுதத்தைத் தாங்கும் தேவேந்திரனும், மை செறி திரு கோலம் உற்று அணிவானும்= கரிய நிறம் உடைய அழகிய வடிவத்தைக் கொண்டு வருகின்ற திருமாலும், மறைகள் புக்கார் என=(சூரனுக்கு அஞ்சி) மறைவிடம் புகுந்து அடைக்கலமாகப் புகுந்தார்கள் என்ற காரணத்தால், குவடு நெட்டு ஆழி வற்றிட=மலைகளைக் கொண்ட நீண்ட கடல் வற்றிப் போகும்படி, அடல் சூரனை பொரும் வேலா=வலிமை நிறைந்த சூரபன்மனுடன் போர் புரிந்த வேலாயுதரே! அறிவுடைத்தாரும்= அறிவு நிறைந்த பெரியோர்களும், மற்று உடன் உனை பாடல் உற்று=அடியேன் பாடும் சந்தப்பாடல்களை என்னுடன் கூடி உம்மைப்பாட, அருணையில் கோபுரத்து உறைவோனே=திருவண்ணாமலையில் கோபுரத்தில் வீற்றிருப்பவரே! அடவியில்=கானகத்தில், தோகை பொன் தட முலைக்கு ஆசை உற்று=மயில் போன்ற வள்ளி நாயகியின் அழகிய கொங்கைமீது காதல் கொண்டு, அயரும் அ சேவக=அயர்ச்சி கொண்ட அந்த ஆற்றல் நிறைந்த, பெருமாளே=

பெருமையின் மிகுந்தவரே! கறுவு மிக்கு=கோபம் மிகுந்த, கலகும்=உயிரைக் கலக்குகின்ற, அ காலன் ஒத்து இலகு=அந்தக் காலனைப் போல் விளங்குகின்ற, கண் சேல் களிப்புடன் நாட=கண் என்ற மீன் மகிழ்ச்சியுடன் விரும்பிப் பார்க்க, கருதி முற்பாடு=யோசனை செய்து முன்னதாகவே, கட்டளை உடல் பேசி=அளவான பொருள் இவ்வளவு என்று பேசி, உள் களவினில்=உள்ளத்தில் வைத்தகள்ளத் தனத்தால், காசினுக்கு உறவால் உற்று=பெற்ற பணத்துக்கு ஏற்ற உறவு பூண்டு, உறுமலர் பாயலில்=பொருந்திய மலர்ப்படுக்கையில், துயர் விளைத்து, வருத்தத்தை உண்டு பண்ணியும், உடல் உற்று=பிணக்கு உற்றும், உயர் பொருட்கு ஓதி=அதிகபணந்தரவேண்டும் என்று கூறி, உள் படு மாதர்—அவர்கள் தந்த பெரிய தொகைக்கே உட்படுகின்ற விலை மாதர்கள், ஒறு வினைக்கே=கடிந்து கூறும் செயலுக்கே, உளத்து அறிவு கெட்டேன்= அடியேன் உள்ளத்தில் அறிவு கெட்டேன், உயிர் புணை=என் உயிருக்குத் தெப்பம் போன்ற, இணைதாள் துணை தொழுவேனோ=உமது இரு திருவடிகளைத் தொழ மாட்டேனோ!

## பொழிப்புரை

வேதங்களை எடுத்து ஓதும் பிரமதேவனும், வஜ்ஜிரப் படையை ஏந்தும் இந்திரனும், கரிய நிறம்படைத்த திருமாலும் சூரனுக்கு அஞ்சி மறைவாகத் திரிந்து தேவரீரிடம் அடைக்கலம் புகுந்து வேண்டியதால், மலைகளுடன் கூடிய நீண்ட கடல் வற்றுமாறு, வலிய சூரமன்மனுடன் போர்புரிந்த வேலாயுதக் கடவுளே! அறிவுமிக்க ஆன்றோர்கள் அடியேனுடன் இருந்து சந்தப்பாடல்களால் உம்மைப்பாட, திருவண்ணமலையில் திருக் கோபுரவாயிலில் எழுந்தருளியிருப்பவரே! கானகத்தில் வாழ்ந்த மயில்போன்ற வள்ளியம்மையின் அழகிய பருத்த தனத்தின்மீது அன்புற்று சோர்வுற்ற சேவகரே! பெருமிதம் உடையவரே! சினம் மிகுந்து உயிரைக் கலக்கும் அந்தக் காலனைப்போல் விளங்கும் கண் என்ற மீன் மகிழச்சியுடன் விரும்பிப் பார்க்க, யோசனை செய்து, முன்னதாகவே அளவான பொருள் இவ்வளவு என்று பேசி, உள்ளத்தே வைத்த கள்ளத்தனத்தால், பெற்ற பொருளுக்கு ஏற்ப உறவு பூண்டு, பொருந்திய மலர்ப்படுக்கையில் வருத்தத்தை யுண்டுபண்ணியும், சிறிது பிணங்கியும், நிரம்பப் பொருள்தரவேண்டும் என்று கூறி, அத்தகைய பெரிய தொகைக்கே உட்படுகின்ற விலை மாதர்கள் கடிந்து கூறும் செயல்களால் உள்ளத்து அறிவுகெட்டு அடியேன் வாடினேன்; பிறவிக் கடலின் தெப்பமாக, என் உயிர்க்கு உதவும் உமது திருவடிகள் இரண்டையும் அடியேன் தொழமாட்டேனோ ?

## விரிவுரை

**கறுவுமிக் காவியைக் கலகும்:—**

கறுவுதல்—கோபித்தல். கலக்கும் என்ற சொல் கலகும் என வந்தது. உயிர்களைச் சினந்து கலக்குபவன் காலன்.

**காலனைத் திலகுகட் சேல்:—**

மாதர்களின் கண்கள் காலனுக்கு நிகரானவை. கொல்லும் இயல்புடையவை; சேல்மீன் போன்றவை.

**கருதி முற்பாடு:—**

கருதி—திட்டமிட்டு. முற்பாடு—முன்னரேயே ஏற்பாட்டுடன் பொருள்பறிக்க முயலுவர் பொதுமாதர்.

**கட்டளை யுடல்:—**

கட்டளை உடல்—அளவான பொருள். ஆரம்பத்தில் அளவாகப் பொருள் கேட்டு, பிறகு அதிகம் கேட்டு அல்லல்படுத்துவார்கள்.

**உட் களவினிற் காசினுக் குறவாகி:—**

களவு—திருட்டுத்தனம். உள்ளே களவான எண்ணத்தை வைத்து உறவு கொள்வர்.

**ஊடலுற் றுயர்பொருட் கோதியுட்படுமாதர்—**

கூடுகின்றபோது ஊடல்கொண்டு நிரம்பப் பணம் தர வேண்டும் என்று கேட்டு, அதிகப் பணம் வாங்கி இணங்குகின்றவர் அம்மகளிர்.

**ஒறுவினைக்கேயுளத் தறிவு கெட்டேன்:—**

ஒறுத்தல்—துன்புறுத்தல். துன்பப்படுத்தும் அம்மாதரது செயல்களால் அடியேன் அறிவு கெட்டேன்.

**உயிர்ப்புணை:—**

புணை—தெப்பம். பிறவிப் பெருங்கடலுக்குத் தெப்பம் போன்றது இறைவனுடைய திருவடிகள்.

''உறவுமுறை மனைவிமக வெனுமலையி லெனதிதய
உருவுடைய மலினபவ ஜலராசி யேறவிடும்
உறுபுணையும்.........சீறடியே'' —திருவகுப்பு. (சீர்பாதம்)

**மறையெடுத்தோதி:—**

ஓதி—ஓதுபவன். மறைகளை ஓதுகின்ற பிரமதேவன். வேதம் ஓதுவதால் பிரமன் வேதன் எனப் பேர் பெற்றனன்.

**வச்சிரமெடுத்தான்:—**

ததீசி முனிவருடைய முதுகெலும்பால் செய்து அமைந்தது வஜ்ராயுதம். இது இந்திரனுடைய ஆயுதம். குலிசம் என்றும் கூறப்படும்.

**மைச்செறி திருக்கோல முற்றணைவானும்:—**

திருமால் கரியநிறம் படைத்தவர். நீலமேகம் போன்ற அழகிய திருமேனியுடையவர்.

**மறைகள் புக்கார்:—**

பிரமனும் இந்திரனும் திருமாலும் சூரபன்மனுடைய கொடுமைக்கு ஆற்றாது அஞ்சி, மறைவிடங்கள் தேடி ஓடி ஒளிந்தார்கள். பின்னர் முருகவேளைத் தஞ்சம் புகுந்து வேண்டி நின்றார்கள். அதனால் முருகவேள் சூரனை வதைத்து, அத்தேவர்கட்கு வாழ்வும் வளமும் வழங்கி யருளினார்.

**குவடு நெட்டாழி வற்றிட:—**

குவடு—மலை. கடலில் பல மலைகள் உள்ளன. நெட்டாழி—நீண்ட கடல். கடல் என்பது பிறவி.

குவடுகள் என்பவை வினைக்குன்றங்கள்; சூரன் ஆணவ மலம்.

ஞானமாகிய வேலினால், வினைக் குன்றங்களுடன் கூடிய பிறவிப் பெருங்கடலை வற்றச் செய்து, ஆணவ மலத்தை அடக்கி அமரர்களாகிய ஆன்மாக்களுக்கு ஆறுமுக அண்ணல் அருள்புரிந்தார்.

**அறிவுடைத் தாருமற் றுடனுனைப் பாடலுற்று:—**

அருணகிரிநாதர் திருப்புகழாகிய சந்தப் பாடல்களைப் பாடும்போது, அறிவுடைய ஞானிகள் பலர் அவருடன் இருந்து பாடிப் பதம் பெற்றார்கள்.

## கருத்துரை

அருணையுறை முருகா! உன் திருவடியைத் தொழ அருள் செய்.

# கற்பு

## கலைச்செல்வி

பூலோக வைகுந்தமாகத் திகழ்வது ஸ்ரீரங்கம். ''பொன்னரங்கம் போற்ருதார் புலையர்தாமே'' என்று ஆழ்வார் அருளிச் செய்கின்ருர். அரங்கநாதர் மேற்கே தலைவைத்து கிழக்கே திருவடி நீட்டி தென்திசை நோக்கி, ஓங்காரவடிவாய விமானத்தின் கீழ் அரவணை மீது அறிதுயில் புரிகின்ருர்.

''அணியரங்கந்தந்தானை அறியாதார் அறியாதார் என்கின்ருர் கம்பநாடர்.

காவிரியின் வடகரையில் பூவிரிந்த மலர்ச்சோலைகள் சூழ ஞானிகளும் அடியார்களும் அன்றும் இன்றும் என்றும் உறைவிடமாகக் கொண்டு முப்போதும் தப்பாது எம் பெருமானை வழிபாடு செய்யும் அரிய பெரிய திருத்தலம் திருவரங்கம்.

''கருதிய ஆறங்கவேள்வி யந்தணர்
அரிகரி கேசவ கோவிந்த என்றிரு
கழல்தொழு ஸ்ரீரங்க ராசன் நண்புறு மருகோனே''

என்று வாய்மணக்கப் பாடுகின்ருர் அருணகிரிநாதர்.

இத்தகு வித்தகத் தலத்தில் சதா அடியார்கள் திருவாய்மொழி ஓதி இறைவனை இறைஞ்சுவார்கள். அந்தணர்கள் வேதகீதம் ஓதி பெருமானின் பாதம் பணிவார்கள். பக்தர்கள் பஜனை செய்வார்கள்.

கணிகையர் மரபில் உதித்த **கலைச் செல்வி** என்ற மாதரசி ஆரா அமுதனான நாராயணனுடைய திருவடியில் திருந்திய சிந்தையுடன் அன்பு செய்து வந்தாள். குடும்ப வாழ்க்கை நடாத்தும் பொருட்டு ஒரு தனவந்தனை நேசித்து ஒரு நெறிப்பட்ட உள்ளத்துடன் கள்ளம் இன்றி வாழ்ந்து வந்தாள்.

கலைச் செல்வியிடம் அந்தவூராருக்குத் தனிமதிப்பு உண்டு. கலைச் செல்வி வீண் விவகாரங்களுக்குப் போகமாட்டாள். வீடு உண்டு கோயிலுண்டு தானுண்டு என்று இருந்தாள். காலை மாலை திருக்கோயிலுக்குச் சென்று பெருமானுக்குக் கும்பாலத்தி யெடுத்துக் கல்லுங் கரையுமாறு கண்ணீர் மல்கி திவ்யப் பிரபந்தப் பாடல்களைப் பாடுவாள். அவள் தெருவில் அன்னநடையிட்டுப் போகும் போது அழகுத் தெய்வம் மனிதவுருவுடன் போவது போல் காட்சியளிக்கும்.

கலைச் செல்வியின் வீட்டிற்கு எதிர் வீட்டில் ஒரு செட்டியார் வாழ்ந்தார். செட்டியார் பெருந் தனவந்தர். வட்டி மேல் வட்டி வாங்கி பெட்டி மேல் பெட்டிகளையடுக்கி வாழ்ந்தார். குட்டி குழந்தைகள் ஒன்றும் இல்லை. அவருடைய நெற்றியில் பரந்த திருமண்ணும், கழுத்தில் துளசி மணி மாலையும் இடையில் பட்டு பீதாம்பரமும் விளங்க பரமபாகவத சிகாமணி போல் விளங்கினார்.

செட்டியாருடைய மனைவிபெருமாளுடையதிவ்யதேசயாத்திரை செய்ய வேண்டும் என்று விரும்பினாள். கணவனாரைப் பார்த்து "உண்பதும் உறங்குவதும் பணத்தைச் சேர்ப்பதுமாகவே வாணாளை வீணாளாகக் கழிக்கின்றீரே! ஆன்மாக்களின் பொருட்டு அரிமுகுந்தன் அர்ச்சாவதாரமாகத் திருக்கோயில் கொண்டிருக்கும் புண்ணிய க்ஷேத்திரங்களைத் தெரிசிக்க வேண்டாமா? இறந்தால் கூடவருவது யாதுளது? புண்ணியந்தானே வரும். க்ஷேத்திரயாத்திரை செய்ய வேண்டும்" என்று பலகாலும் வற்புறுத்தி வேண்டினாள்.

மனைவியின் தொல்லைக்கு அஞ்சிய செட்டியார் யாத்திரை செய்யத் திட்டம் இட்டார். அந்தக் காலத்தில் கரன்ஸிநோட்டும், பணத்தைச் சேமித்து வைக்கப் பாங்குகளும் கிடையா. பொன்னும் மணியுமாகவே இருந்த காலம் அது. பணத்தை யாரிடம் தந்து விட்டுப் போவது; இந்தக் காலத்தில் யாரை நம்ப முடியும்? வீட்டில் புதைத்தால் உளவு தெரிந்த களவாணிகள் பெருச்சாளி தோண்டுவது போல் தோண்டிக் கவர்ந்துவிடுவார்களே? என் செய்வோம்? என்று நெடிது சிந்தனை செய்தார். முடிவில் ஒரு முடிவுக்கு வந்தார்.

"காவிரிக்கரையில் நாராயண யதீந்திரர் என்ற ஒரு மகான் இருக்கின்றார். அவர் மூவாசையும் துறந்தமுநிபுங்கவர். அவருடைய திருமடத்தில் ஒப்புவித்தால் ஒரு சிறிதும் அச்சம் இல்லை. இதுதான் சிறந்த வழி" என்று செட்டியார் முடிவு செய்தார்.

செட்டியார் மடத்துக்குச் சென்றார். அம்மடாலயத்தில் சீடர்கள் புடைசூழ மான்தோல்மீது மகான் நாராயண யதீந்திரர் அமர்ந்திருந்தார். தன்னுடைய நெற்றி முழுவதும் மறைத்த பட்டை நாமமும், கழுத்தை மறைத்த துளசிமணி மாலைகளும் துலங்க "நாராயணம்" "நாராயணம்" என்று கூறிக்கொண்டு அவர் காவியுடையுடன் காட்சி தந்தார். அருகில் இருந்த சீடர்கள், பொங்கலும் புளியோதனமும் தோசையும் வடையும் பாலும் பழமும் அளவின்றி உள்ளே விழுங்கிக் குண்டாந்தடிகள் போல, மொழுமொழு என்று மினுமினுக்கும் உடம்புடன் நின்றுகொண்டிருந்தார்கள். சால்போல் இருந்த வயிற்றில் வேட்டிகள் நிற்காமல் அரைஞாண்கயிற்றுடன் சரிந்து, எல்லோரும் பூரண கர்ப்பிணிகள் போல் காட்சியளித்தார்கள்.

செட்டியார் அடிகளாருடைய அடிமலர்மீது மூன்று முறை வீழ்ந்து கும்பிட்டார். பயபக்தியுடன் கொண்டுபோன பழத் தட்டை எதிரில் வைத்தார். சுவாமிகள் வேறு ஒரு வார்த்தையும் சொல்லாத விரதம் பூண்டவர். "நாராயணம்" "நாராயணம்" என்ற ஒரு மொழியை மட்டும் உச்சரிப்பார். மற்ற தகவல்களைக் குறிப்பினாலேயே காட்டி உணர்த்துவார்.

செட்டியாரைப் பார்த்து "நாராயணம்" என்று கூறி வந்த காரணம் யாது? என்ற குறிப்பில் கையை அசைத்தார்.

செட்டியார், "பற்றற்ற பரமஞான சிகாமணியே! அடியேங்கள் உய்ய வந்த உத்தம தபோநிதியே! அடியேன் இந்தவூரில் வாழ்பவன் தேவாள் அநுக்கிரகத்தினால் சிறிது செல்வம் உள்ளது. திவ்யதேச யாத்திரை செய்து உய்வு பெற ஆசைப்படுகிறேன். தாசனுடைய செல்வத்தை இங்கே ஒப்படைக்க எண்ணுகின்றேன். யாத்திரை முடித்தபின் பெற்றுக் கொள்வேன். இதற்குத் தேவாள் உத்தரவு தரவேணும்" என்றார்.

நாராயண யதீந்திரருடைய அகமும் முகமும் மலர்ந்தன. "நாராயணம்" "நாராயணம்" "நாராயணம்"என்று கூறி கையால் கொண்டுவா. இங்கே இருக்கட்டும், நீபோய் வா" என்று சைகை காட்டினார்.

செட்டியாருக்குப் பெருமகிழ்ச்சி, இத்தகைய மகானை எங்கும் காண முடியாது. மனித குலத்தை வாழவைக்க வந்த புனித மூர்த்தி இவர். சாக்ஷாத் வைகுந்தத்தில் வாழும் நாராயணரே மானிடச் சட்டை தாங்கி இப்படி எழுந்தருளியிருக்கின்றார் போலும். ஆகா! நம் எண்ணம் ஈடேறியது" என்று எண்ணினார். அடிகளாரைப் பல முறை பணிந்தார். வீட்டுக்கு ஓடினார். மனைவியிடம் விஷயத்தை விளம்பினார். விலை மதிக்க வொண்ணாத வைரம் ரத்தினம் பச்சை பொன் நாணயங்கள் அனைத்தையும் ஒரு பெரிய செப்புக் குடத்தில் இட்டு மேலே ஒரு தட்டு வைத்துத் துணியால் மூடி கயிறு சுத்தி அரக்கு சீல் வைத்து, இரகசியமாக வண்டியில் ஏற்றி மடாலயம் போனார். மடத்துத் தலைவர் முன் குடத்தைவைத்துக் கும்பிட்டார்.

"சுவாமீ! இதில் சற்று முன்பின் பன்னிரண்டு லட்சம் பெறுமதியுள்ள செல்வம் அடங்கியுள்ளது. தாசன் வாழ்நாள் முழுவதும் அரும்பாடுபட்டுச் சேர்த்த பெரும் பொருள். பகவானிடம் ஒப்பு வித்ததுபோல் தேவாளிடம் ஒப்படைத்தேன். இனி எனக்கு இது பற்றிப் பயமில்லை. தாசன் திவ்யதேச யாத்திரைக்குப் போய் வருகின்றேன். உத்தரவு கொடுங்கள்" என்றார்.

சுவாமிகள் "நாராயணம்" என்றார். மணலினின்று தோண்டி எடுத்த மரவள்ளிக்கிழங்குபோல் ஒரு சீடன் வந்து கைகட்டி வணங்

கிய உடம்புடன் எதிரில் நின்ருன் அடிகளார் குடத்தைக் காட்டி, அவன் கையிலே திறவுகோலைக் கொடுத்து, "நாராயணம்" "நாரா யணம்" நாராயணம் என்று கூறி "இதைக் கொண்டுபோய் பெட்டி யில் வைத்துப் பூட்டிச் சாவியைக் கொண்டுவா" என்று ஜாடை காட்டினர். அவன் அதுபடியே செய்தான்.

"நாராயணம்" "நாராயணம்" என்று செட்டியாரைப் பார்த்து நீ போ என்ற குறிப்பைக் காட்டி கையை ஆட்டினர். பரம திருப்தியுடன் செட்டியார் புறப்பட்டுப் போனர்.

மனைவியை அழைத்துக்கொண்டு,கொஞ்சம் பணத்தையும் எடுத் துக்கொண்டு செட்டியார் யாத்திரைக்குப் போனர். கோயில்களில் அர்ச்சனை செய்து சில்லரைக் காசுகளைத்தட்டில் போட்டு, கோயில் பிரசாதங்களை வாங்கிப் புசித்துக்கொண்டு நிம்மதியாக யாத்திரை செய்தார். அது புகை வண்டி கார் முதலிய வசதிகள் இல்லாத காலம். நடந்தும், மாடு, குதிரை வண்டிகள் மூலமாகவும் யாத்திரை செய்தார் ஆறு மாதங்கள் கழித்துச் செட்டியார் வீடுவந்து சேர்ந் தார். நல்ல நாளில் ததியாராதனை செய்தார். பாகவதாளுக்குப் படைத்தார். அன்று மாலை பண்டரிபுரம் பிரசாதம் பழம் முதலியன ஒரு தட்டில் எடுத்துக்கொண்டு மடாலயம் போய் நாராயண யதீந்திரருடைய பாதமலர் மீது அடியற்ற பனைமரம் போல் வீழ்ந்து வணங்கினர்.

சுவாமிகள் ஒரு புன்னகை பூத்து, "நாராயணம்" என்று கையை அமைத்தார்.

"சுவாமி ஜீ! தாசனும் தாசன் மனைவியும் தேவாள் கிருபையால் பண்டரிபுரம், கோதாவரி, துவாரகை, பூரிஜகந்நாதம், ஆழ்வார் திருநகரி, வானமாமலை, ஸ்ரீவில்லிபுத்தூர் முதலிய பலப்பல திவ்ய தேசங்களைச் சேவித்துத் தன்யனுனேன். முன் தாசன் தேவாளிடம் ஒப்புவித்த குடத்தைத் தந்தருளும்" என்ருர் செட்டியார்.

யதீந்திரர் "நாராயணம்" "நாராயணம்" என்று கையை விரித் தார். "ஒன்றுமில்லையே" என்று கையை நாட்டியருளினர். செட்டியார் திடுக்கிட்டார். அதிர்ச்சியடைந்தார். "சுவாமிஜி! முன் அடியேன் தந்தேனே?" என்ருர். "ம்......ம்" "நாராயணம்" "நாராயணம்" என்று அதட்டினர். துருவாசரைப்போல் கண்களைச் சுழற்றி விழித்து, நெருப்புப் பொறி பறக்கப்பார்த்தார். "நாராயணம்" "நாராயணம்" என்று உரக்க முழக்கம் செய்து 'போ வெளியே' என்று கரமலரைக் காட்டி அருள்புரிந்தார்,

"சுவாமீ! அடியேன் பஞ்சுபடாத பாடுபட்டு என் வாழ்நாள் முழுவதும் தேடிச் சேமித்த பொருள். இப்படி என்னை ஏமாற்ற லாமா? இது தகுமோ? முறையோ? பட்டை நாமத்தைப் பரக்கப்

போட்டுக்கொண்டு எனக்கே நாமத்தைப் போடுகின்றீரே! சிறிது எடுத்துக்கொண்டாவது மிகுதியைக் கொடும்'' என்று கூறிக் கெஞ்சினர், கொஞ்சினர், அழுதார்; தொழுதார், கூத்தாடினர் செட்டியார்.

''நாராயணம்'' ''நாராயணம்'' என்று கூறி அருகில் ஒரு பயில்வானைப் போல் காட்சி தந்து நின்ற சீடனைப் பார்த்தார் யதீந்திரர். அந்த முரட்டுச் சீடன் செட்டியார் கழுத்தில் கையை வைத்து மடத்தை விட்டு வெளியே தள்ளினன்.

செட்டியார் என் செய்வார்?பெருக்த ஏமாற்றத்துடன் வீட்டுக்கு வந்து புரண்டு புரண்டு அழுதார். மனைவியிடம் எல்லாவற்றையுங் கூறி, சுவாமி வேடம் போட்டு நம் குடித்தனத்தைக் கெடுத்தான் பாவி என்று வைதார். உண்ணவில்லை உறங்கவில்லை.பித்தனைப்போல் அலறினர்.

மறுநாள் காலை எதிர் வீட்டில் வாழும் உத்தமியாகிய கலைச் செல்வி செட்டியாருடைய இல்லத்தில் சென்று, செட்டியாரையும் செட்டியார் மனைவியையும் வணங்கினள். ''செட்டியாரே! தாங்கள் மகாபாக்கியசாலி. திவ்யதேசயாத்திரை செய்து, புண்ணியத்தை மலைபோல் பெற்றுத் திரும்பினீர்கள். பிரசாதம் தாரும்'' என்ருள்.

''அம்மா! நான் யாத்திரை செய்து பரதேசியாகப் போனேன் 'யாத்திரை, யாத்திரை' என்ருள் இவள். நாராயணப் பரதேசி எனக்குத் தரித்திரமாத்திரை கொடுத்துவிட்டார். என் வயிற்றெரிச்சலைக் கிளராதே நீ போய் வா'' என்ருர்.

''செட்டியாரே! என்ன விஷயம்? விவரமாகச் சொல்லும்'' என்ருள் கலைச் செல்வி. நடந்தவையனைத்தும் கூறினர் செட்டியார்.

கலைச் செல்வி ''செட்டியாரே! வீணே சத்தம் போடாதீர் உலகம் உம்மைத்தான் பழிக்கும், சிரிக்கும். சாமியாரிடம் தந்ததற்குச் சாட்சி கிடையாது. இனி அந்தப் பணம் திரும்புவது அரிது. யானைவாயில் தந்த வாழைப்பழம் போல் ஆயிற்று. பக்குவமாக, என் அறிவைப் பயன்படுத்தி சிந்தாது உம் செல்வத்தை வாங்கித் தருகின்றேன்'' என்ருள்.

செட்டியார் ''தாயே! அப்படி வாங்கித் தந்தால் உனக்கு நான் காணிக்கையாக நூறு பவுன் தருவேன்; இது சத்தியம்'' என்ருர்.

கலைச் செல்வி ''செட்டியாரே! நான் சொல்வதைக் கவனமாகக் கேளும்; நான் சொன்னபடி நீர் நடக்கவேணும். உமது பணம் முழுவதும் ஒரு சிறிதும் குறையாமல் உம்பால் சேரும். நான் இன்று மாலை சுவாமிகள் மடத்துக்குப்போய் பேசிவிட்டு வருவேன். மறுபடியும்

இரவு 8 மணிக்கு இரண்டாவது முறையாகப் போய் சுவாமிகள் முன் பேசிக் கொண்டிருப்பேன். அந்தச் சமயம் பார்த்து நீர் வந்து குடத்தைக் கேளும். குடம் உம்பால் குறைவின்றி சேரும். சேர்ந்த பின் நீர் குறிப்பிட்டபடி நூறுபவுன் எனக்குக் கொடும் இதில் சிறிது கூட பின் முன் இல்லாமல் நடக்கவேணும்'' என்ருள். செட்டியார் ''சரி'' என்ருர்.

கலைச் செல்வி வெள்ளித் தட்டில் நிரம்பப் பழங்கள், கற்கண்டு வெற்றிலைப் பாக்கு இவைகளை யேந்திக்கொண்டு வண்டியில் சென்று மடாதிபதியின் முன் தட்டுக்களை வைத்து வணங்கி பயபக்தி யுடன் நின்ருர்.

''நாராயணம்'' ''நாராயணம்'' என்று கூறி சுவாமிகள் கரங் களை அசைத்தார்.

கலைச் செல்வி ''சுவாமீ! அடியாள் இந்தவூரில் வாழும் தேவ தாசி. அடியாளுக்கு பதரிநாத் கேதாரநாத் முதலிய திருத்தலங்களை சேவிக்க வேண்டும் எனற ஆவல் வெகு நாட்களாக உண்டு. என் முன்னோர்களும் நானும் தேடிய பொன்னும் மணியும் ஏராளமாக இருக்கின்றன. இந்தக் காலத்தில் யாரையும் நம்புவதற்கு இல்லை. தேவாள் மூவாசையும் அற்ற முனீந்திரர்.சற்றுஏறக்குறைய அறுபது லட்சம் பெறுமதியான சொத்துக்கள் என்பால் உண்டு. இன்று அவற்றைக் கொணர்ந்து இரகசியமாகத் தங்கள் பால் ஒப்புவிக் கின்றேன். தேவாள் வைத்திருந்து, நான் திரும்பி வந்தபின் தந்தருள வேண்டும்'' என்ருள்.

அடிகளாருக்கு அளவற்ற மகிழ்ச்சி யேற்பட்டது. ''இன்று சரி யான வேட்டை. சீதேவி நம்பால் தேடிவந்து அடைக்கலம் புகு கின்ருள்'' என்று கருதினுர்.

''நாராயணம்'' ''நாராயணம்'' என்று கூறி கொண்டுவா. வைத்துவிட்டுப் போய்வா என்ற குறிப்புக்களைக் கையை அசைத் துக் காட்டினுர்.

கலைச்செல்வி சுவாமிகளை மறுபடியும் வணங்கிவிட்டு வீட்டுக்கு வந்தாள். பாத்திரக் கடைக்கு ஆள் அனுப்பி செப்புக்குடங்களை வாங்கிவரச் செய்தாள். அவற்றுள் கருங்கல் ஜல்லிகளை இட்டு நிரப்பி மேல் வைத்துத் துணியால் மூடிக் கட்டி அரக்குச் சீல் வைத்தாள்.

வேலைக்காரியிடம் இரகசியமாக சில வார்த்தைகள் கூறி, நான் மடத்தில் சுவாமிகளிடம் பேசிக் கொண்டிருப்பேன், அப் போது செட்டியார் வந்து பணம் அடங்கிய குடத்தைப் பெற்றுத் திரும்புவார். அந்தக் கணத்தில் நீ வந்து இந்தக் கடிதத்தை அழுது கொண்டே கொடு'' என்று கூறி எச்சரித்தாள்.

சரியாக இரவு மணி எட்டு. அருமையான வெல்வெட்டு தைத்த வில் வண்டியில் மூன்று செப்புக் குடங்களை வைத்துக்கொண்டாள். தங்கள் உறவினர்களிடம் உள்ள வைரநகைகள் முத்துமாலைகள்; மரகத மணிகள் பதித்த அணிகலன்களை இரவலாக வாங்கி ஒரு தந்தப்பெட்டியில் வைத்துக்கொண்டாள். விலையுயர்ந்த சரிகைப் புடவையை யுடுத்திக் கொண்டாள். புஷ்பம் போல் ஒளிவிட்டு உதிர்கின்ற வைரத்தோடு, வைர நெக்லஸ், வைர வளையல்கள் மின்ன கலைச்செல்வி மடத்துக்குள் நுழைந்தாள். ' வேலைக் காரர்கள் தூக்க மாட்டாமல் தூக்கி மூன்று செப்புக் குடங் களையும் அடிகளார் திருமுன் வைத்தார்கள். கலைச் செல்வி மகாலட்சுமியைப் போல் அவர் அருகில் அமர்ந்தாள். யதீந்திர ருடைய உடம்பில் ஒருவித இன்ப வுணர்ச்சி மின்சாரம் பாய்வது போல் பாய்ந்தது. உள்ளம் கிளுகிளுத்தது. முகத்தில் அசட்டுச் சிரிப்பு தவழ்ந்தது.

கலைச் செல்வி, தந்தப்பெட்டியைத் திறந்தாள். அதில் உள்ள விலைமதிக்க ஒண்ணாத அணிகலன்களை யெடுத்தாள். ஒரு வெல் வெட்டுத் துணியை விரித்து அதன் மீது அணிகலன்களைப் பரப் பினாள்.

''சுவாமிஜீ! இந்த வைரத்தோடு 7 ஆயிரம் பெறுமதியானது: இந்த வைர நெக்லஸ் 30 ஆயிரம் பெறுமதி; இந்த வைரவளையல் 15 ஆயிரம் பெறுமதி. இந்த மிகவுயர்ந்த பச்சைக்கல் பதக்கம் 30 ஆயிரம்; இந்த ரத்னவில்லை 7 ஆயிரம்; இந்த முத்துமாலை மூவாயிரம் இந்த நவரத்னமாலை 9 ஆயிரம் என்று ஒன்று ஒன்றாக யதீந்திரரிடம் காட்டிக் கொண்டிருந்தாள். அந்த அணிகலன்கள் பளபள என்று விளக்கொளியில் மின்னின. கண்ணைப் பறித்தன. யதீந்திரருக்கு அடங்காத அவாவுண்டாகியது, ''ஆ! ஆ!இன்று நமக்கு மிகவுயர்ந்த பணவேட்டை'' என்று எண்ணினார்.

''நாராயணம்'' ''நாராயணம்'' என்று கூறி தலையையும் கையை யும் அசைத்து இங்கே வைத்துவிட்டுப் போ'' என்று குறிப்பிட்டார். இந்த நேரத்தில் செட்டியார் வந்தார். ''சுவாமிஜீ! தாசன் யாத்தி ரைக்குப் போகுமுன் தந்து வைத்த செல்வக்குடத்தைக் கொடுத் தருளும்'' என்றார்.

இப்போது அடிகளாருடைய மூளை வேலை செய்யலாயிற்று. இந்த வேளையில் இந்தச் சனியன் ஏன் வரவேணும். இப்போது நாம் ஏமாற்றுப் பல்லவியைப் பாடினால் இந்தத் தாசி விழித்துக் கொள்வாள். கொண்டுவந்த இந்த மூன்று செப்புக் குடங்களை இங்கே வைக்க மாட்டாள். இது அறுபது லட்சம். செட்டியாருடை யது இருபது லட்சம். ஆகவே நாம் இப்போது புத்திசாலித்தனமாக

இருபது லட்சத்தைக் கொடுத்து விட்டு அறுபது லட்சத்தை அடிக்கவேண்டும்'' என்று எண்ணினார்.

''நாராயணம்'' என்றார். ஒரு சீடன் வந்தான். ''நாராயணம்'' ''நாராயணம்'' என்று கூறி கையை அசைத்து குடத்தைக்கொண்டு வந்து கொடுக்குமாறு கட்டளையிட்டார். அவன் சாவியை வாங்கிக் கொண்டு போய் பெட்டியைத் திறந்து குடத்தைக் கொணர்ந்து செட்டியாரிடம் கொடுத்து விட்டான். செட்டியாருக்கு அளவற்ற ஆனந்தம். மனதுக்குள் கலைச் செல்வியைக் கும்பிட்டுக் கொண்டு குடத்தை வண்டியில் வைத்துக் கொண்டு புறப்பட்டுப் போனார்.

அந்த வேளையில் கலைச்செல்வியின் பணிப்பெண் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக ஒரு கடிதத்தை ஏந்திக்கொண்டு வந்தாள்.

''அம்மா! அம்மா! பட்டணத்திலே உங்கள் தாயார் காலமாகி விட்டாராம். இதோ கடிதம் வந்துளது. உங்களை முந்நூறுநாள் சுமந்து பெற்று வளர்த்தெடுத்த அன்னை மறைந்து விட்டார்களாம்'' என்று கூறிக் கதறி யழுதாள்.

இதனைக் கேட்ட கலைச் செல்வி, ''ஐயோ? என் தாய் போய் விட்டாளோ? தெய்வமே! பெற்ற தாய் போனபின் எனக்கென்ன யாத்திரை வேண்டியுளது. யாத்திரை அடுத்த ஆண்டில் பார்த்துக் கொள்ளலாம். அடேய்! வண்டிக்காரா! எல்லாவற்றையும் வண்டியில் எடுத்துவை'' என்று கூறி அவசரம் அவசரமாக மூட்டை கட்டி வண்டியில் வைத்துக்கொண்டு மின்னல்வேகத்தில் போனாள். இந்தத் திடீர் நிகழ்ச்சியைப்பார்த்த யதீந்திரர் வாய்த்தவிடும் போய் அடுப்பு நெருப்பும் போய் ஏமாந்தார். ஆ என்று வாயைப் பிளந்து உட்கார்ந்தார். கலைச்செல்வியின் அறிவின் திறத்தையும் தன் அறியாமையையும் நினைந்து உள்ளம் உலைந்தார். நிலைகுலைந்தார்.

கலைச் செல்வி தன் வீடு போய் ஆங்காங்கே இரவலாக வாங்கிய அணிகலங்களை அவரவர்கள் பால் கொடுத்துவிட்டு, சிரித்த முகத்துடன் செட்டியார் வீட்டுக்குச் சென்றாள்.

''செட்டியாரண்ணா! எப்படி நம்ம வேலை? நான் போட்ட நாடகத்தைப் பார்த்திரா? உமது பணம் உம்மிடம் சிந்தாமல் வந்துவிட்டது. உங்கள் உள்ளம் குளிர்ந்திருக்கும். எனக்குத் தாங்கள் வாக்களித்தபடி 100 பவுன்களைக் கொடும்'' என்றாள்.

செட்டியார் உள்ளே போய் ஒரு பத்து ரூபாய் கொணர்ந்து கலைச் செல்வியிடம் நீட்டினார். கலைச் செல்வி அதிசயத்துடன் செட்டியாரைப் பார்த்தாள். ''என்ன செட்டியாரே! உமக்கு என்ன மதிமயக்கமா? நூறு பவுன் தருவதாகக் கூறினீரே. இது என்ன பத்து ரூபாய்?'' என்றாள்.

# மகா பாரதம்

(240-ம் பக்கத் தொடர்ச்சி)

தருமர் "அறிவுமயமானவரே! பஞ்சமும் துயரமும் உண்டாகி உலகம் நிலை குலைந்துள்ள காலத்தில் எப்படி நடக்க வேண்டும்?" என்று கேட்டார்.

## விச்வாமித்திரர்

பீஷ்மர், "தருமா! ஒரு சமயம் பன்னிரு ஆண்டுகள். * அனுவிருஷ்டி யுண்டாயிற்று. ஆறு, குளம், கிணறு அனைத்தும் வற்றிவிட்டன. பசிபசி என்று எங்கும் கூக்குரல் எழுந்தது. உயிர்கள் மாண்டு எலும்புகள் குவிந்தன. ஒருவரையொருவர் அடித்துத் தின்றார்கள்.

விச்வாமித்திரர் பலநாட்கள் உணவின்றி வாடி வருந்தினார். உணவை நாடி ஓடினார். பறைச்சேரியில் நாயின் மாமிசத்தைக் கண்டு அதைத் திருடினார். அந்த வீட்டுக்கு உரியவன் கண் விழித்துக் கொண்டான்.

---

செட்டியார் "என்ன அம்மா? நீ என்ன பாடு பட்டுவிட்டாய்? இரு முறை மடத்துக்குப் போய் வந்தாய். இவ்வளவுதானே? ஒரு முறைக்கு 5 ரூபாய் போதாதா? அதிக ஆசை கூடாது" என்றார்.

கலைச் செல்வி, "செட்டியாரே! ஆசை எனக்கா? உமக்கா? வாக்குதான் மனிதனுக்கு முக்கியம். ஒரு சொல்லுக்குத்தானே அரிச்சந்திரன் மனைவியை விற்றான். புலையனுக்கு அடிமையானான். மயானங் காத்தான். நீர் 100 பவுன் தருகின்றேன் என்று கூறினீரே! இப்போது 10 ரூபாய் தருகின்றீரே! இது முறையா? நான் போய் வந்தது இரு முறைதான் போய் வந்தேன். என் மூளை எத்தனை வேலை செய்திருக்கும்? அறிவுக்குத்தான் பெருமை. இந்தப் பத்து ரூபாயை நீரே வைத்துக் கொள்ளும். உம்முடைய பணத்தை நான் விரும்பவில்லை. உம்முடைய உள்ளத்தை அளந்து பார்த்தேன். பணமே குணம் என்று நீர் இருக்கின்றீர். சுகமாக இரும். நான் வருகின்றேன்" என்று கூறிவிட்டு கலைச்செல்வி தன் இல்லம் சென்றாள். செட்டியார் வெட்கித் தலைகுனிந்தார்.

கலைச் செல்வி சதா அரங்கநாதரை வழிபட்டு வந்தாள்.

---

* அனுவிருஷ்டி - மழையின்மை

அதிசயம் அடைந்தான். இது நாய் மாமிசம். நான் சண்டாளன். நீர் இதைத் திருடி உண்பது நியாயமா? நீர் முனிவர். உமது தவம் அழியும் உமது பெருமை குன்றும்'' என்றான்.

''அப்பா! உயிர் வாழ்வதுதான் முக்கியம். இதையுண்டபாவத்தைத் தவத்தால் அகற்றிக் கொள்வேன்'' என்று பல நியாயங்களைக் கூறி அதை யெடுத்துப் புசித்து, தேவர்கட்கு அவிமுதலியன தந்து உபசரித்தார். இந்திரன் மழை பெய்தான். ஆதலால் துன்பத்திலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொண்டு உலகத்துக்கு நன்மை புரியவேண்டும்'' என்றார்.

## புருவின் கதை

தருமர் ''எல்லா நூல்களிலும் வல்ல பிதாமகரே! சரணம் அடைந்தவனைக் காப்பவனுக்கு என்ன பயன் உண்டாகும். இதை எனக்குச் சொல்லியருளும்'' என்று கேட்டார்.

பீஷ்மர் ''தருமநந்தனு! சிபி முதலிய அரசர்கள் சரணம் அடைந்தவனைக் காத்து உத்தமமான நற்கதியடைந்தார்கள். சுக்கிராச்சாரியார் மு. சுகுந்தனுக்குக் கூறிய இனிய இந்த வரலாற்றைக் கூறுகின்றேன்; கேள்.

ஒரு அடர்ந்த காட்டில் கொடிய வேடன் ஒருவன் இருந்தான். அவன் அண்டங் காக்கை போன்ற கரிய நிறமுள்ளவன். காலன் போன்றவன். கருணையில்லாதவன். பறவைகளைக் கொன்று தின்று கொண்டு திரிபவன், அவனுக்கு உற்றாரும் உறவினரும் இல்லை.

ஒரு நாள் அவன் கானகத்தில் பறவைகளைப் பிடிக்கும் பொருட்டு சுற்றிக்கொண்டிருந்தான். திடீர் என்று கரிய மேகங்கள் சூழ்ந்து பேய் மழை பொழிந்தது. காடு முழுவதும் வெள்ளம் மூடியது. மரங்கள் வேருடன் முறிந்து வீழ்ந்தன. வேடன் நனைந்து அங்கும் இங்கும் அலைந்தான். அங்கு ஒரு பெண் புறு நனைந்து விழுந்திருந்தது. வேடன் அதை எடுத்துத் தன் கூட்டில் போட்டுக்கொண்டான். இரக்கமே யில்லாத அரக்கன் போன்ற அவனுக்குப் பாவம் என்பது பாயசமாகச் சுவைத்தது. பொழுதுபோய் எங்கும் இருள் சூழ்ந்தது.

விண்ணளாவிய ஒரு ஆலமரத்தின் அடியில் அமர்ந்தான். பல மலர்கள் நிறைந்ததும், இனிய காற்று வீசுவதும் ஆகிய அம்மரத்தடியில் இரவைக் கழிக்க எண்ணினான்.

அந்த மரத்தில் வாழ்கின்ற ஆண்புறு, காலையில் தன்னைவிட்டு இரை தேடிச் சென்ற பெண் புறுவை நினைந்து புலம்பத் தொடங்கி

யது. ''என் அன்புள்ள பெண்மணியே! இன்று எனக்கு உடல் நலம் இல்லையென்று நீ இரைதேடச் சென்றனையே. இரவு வந்தும் நீ வரவில்லையே. உனக்கு என்ன துன்பம் வந்ததோ? நீ இல்லாத இந்த இடம் துன்ப மயமாக இருக்கின்றதே. மக்களும் மற்றவுறவினர்களும் இருந்தாலும் மனைவியில்லையானால் வாழ்வு ஏது? இன்பந்தான் ஏது? அன்புள்ள மனைவியில்லாத வீடு காடுதானே. நீ என் குறிப்பறிந்து நடக்கும் நற்குணமுள்ளவள். அன்பின் கருவூலமாக என்பால் நடக்கும் நலம் பூண்டவள். நான் உண்டபின் உண்பாய்; நான் உறங்கிய பின் உறங்குவாய். நான் மகிழ்ந்தால் நீ மகிழ்வாய்; நான் துன்புற்றால் துன்புறுவாய். நான் இரை தேடும் பொருட்டுப் புறப்பட்டால் வாடிய முகத்துடன் இருப்பாயே. என் உடம்பில் தினவு எடுத்தால் உன் மூக்கினால் சொரிந்து இதம்புரிவாய். வேர்த்தால் உன் சிறகினால் விசிறி விடுவாய். அறம் பொருள் இன்பம் இந்த மூன்றுக்கும் மனைவி தான் துணை. நீ என் நல்வினைப் பயனால் கிடைத்த உத்தமி. உன்னைப் பிரிந்து நான் எங்ஙனம் வாழ்வேன்? ஆ என் இதயம் பிளந்து விடும் போல் வேதனை யுண்டாகியுளது. என் அன்பே! அன்பின் அமுதமே! அமுதத்தின் சுவையே! நீ எங்கு சென்றனையோ? காயிருக்கக் கனியிருக்க, பறவைகளைப் பிடித்துத் தின்னும் பாதகர்களில் எவன் உன்னைப் பிடித்துக் கொண்டானோ? அந்தோ! உன்னை நினைக்குந் தோறும் என் உள்ளம் உருகுகின்றதே! கனியமுதம் போன்ற இனிய உரையால் என்னைச் சதா மகிழ வைப்பாயே. என் வாழ்க்கைத் துணையான உன்னை நான் இனி காண்பேனோ? மனத்துக்கு உகந்த மணி விளக்கே! உள்ளத்தில் தித்திக்குந் தெள்ளமுதமே! உனக்கு என்ன இடர் வந்ததோ? என் செய்வேன்''என்று அழுது புலம்பியது.

வேடனால் பிடிபட்டுக் கூட்டில் அடைபட்டிருந்த பெண்புறு தன் கணவனுடைய புலம்பலைக் கேட்டது. ''ஆ! நமது கணவனார் நம்மைப்பற்றி இவ்விதம் இன்னலுற்றுப் புலம்புகின்றார். நான் மிகவும் பாக்கியம் பெற்றவள். கணவனால் மகிழப்படுகின்ற மனைவி தானே மனைவி. எவளைக் கண்டு கணவன் மகிழ்கின்றானோ அவளைக் கண்டு எல்லாத் தெய்வங்களும் மகிழ்கின்றன. கணவனுடைய கோபத்துக்கு ஆளான மனைவி தீயில் விழுந்த பஞ்சுபோல் சாம்பலாவாள்'' என்று எண்ணியது. தான் கூட்டில் அகப்பட்டுத் துன்புற்றிருப்பதையும் சிந்திக்காமல், தன் அன்புக் கணவனைப் பார்த்துச் சொல்லத் தொடங்கியது.

''நற்குணம் நிறைந்த நாதா! நீ வருந்தாதே. நான் இந்த வேடனுடைய கூட்டில் அகப்பட்டுக் கிடக்கின்றேன். இந்த மரம் நம்முடைய வீடு. இந்த வேடன் நமது இல்லத்துக்கு வந்த அதிதி, விருந்தோம்புவது இல்லறத்தாருடைய முதற் கடமை. இவன் மழையால் நனைந்து, பசியாலும் குளிராலும் மெலிந்து நலிந்திருக்கின்றான். இவ

னுடைய குளிரை மாற்றி இவனுக்கு உணவு கொடுத்து உதவி செய். சரணமடைந்தவனைக் காப்பது தலையான தருமம். என்னைப் பற்றி வருந்தற்க. மரணம் எப்பொழுதும் எவ்விடத்தும் வந்தே தீரும். அறிஞர்கள் மரணத்தைக் குறித்து வருந்த மாட்டார்கள். வீடு தேடி வந்த விருந்தினனுக்கு உதவி செய்தால் வீடுபேறு எளிதில் கிடைக்கும்.'' என்று கூறியது.

ஆண்புறு தன் மனைவியின் அறவுரையைக் கேட்டு மகிழ்ந்தது. தன் மனையின் நற்குணத்தை எண்ணி அதிசயம் அடைந்தது. வேடனைப் பார்த்து ''ஐயா! உனக்கு நல்வரவு. நீ என் இல்லத்துக்கு வந்த விருந்தாளி. தன்னை வெட்டுகின்றவனுக்கு மரம் நிழல் கொடுத்து உதவுகின்றது. பகைவனேயானாலும் வீட்டுக்கு வந்தவனை ஆதரிப்பது இல்லறத்தானுடைய கடமை. ஐந்து யாகங்களில் சிறந்தது அதிதிபூஜை. இப்போதே நான் உனக்கு உதவி செய்வேன். வருந்தற்க'' என்று இன்னுரை கூறியது. பறந்து போய் நெடுந்தூரத்தில் இருந்த ஒரு கம்மாளனுடைய வீட்டில் இருந்த கொள்ளியுடன் கூடிய ஒரு சுள்ளியைக் கொணர்ந்து வேடனுக்கு முன் போட்டது. அம்மரத்தில் காய்ந்திருந்த சுள்ளிகளையும் சருகுகளையும் அதன் மீதிட்டு சிறகினால் விசிறி நெருப்பை யுண்டாக்கியது. வேடன் குளிர் காய்ந்து உணர்ச்சி பெற்றான்.

புறு ''வேடனே! நாங்கள் நாளைக்கு வேண்டும் என்று சேமித்து வைப்பதில்லை. கபோத விருத்தி என்று எங்கள் வாழ்வை முனிவர்கள் மேற்கொள்வார்கள். எனது இல்லத்துக்கு வந்த நீ பசித்திருக்கின்றாய். இல்லறத்தானுடைய வீட்டில் ஒரு அதிதி பசித்துப் படுப்பானானால் அவன் அதுவரையில் செய்த பாவத்தில் பாதி இல்லறத்தானைச் சேரும். உனக்கு நான் எதைத் தருவேன். என்னிடம் ஒன்றும் இல்லை. இதோ உன்னால் பிடிபட்டு வாடியிருக்கின்ற என்வாழ்க்கைத் துணைவி உனக்கு உணவு தருமாறு என்னை வேண்டிக் கொண்டாள். புறுக்களாகிய நாங்கள் புலால் உண்பதில்லை. புலால் உணவு பெரும் பாவம். நீ கொன்று தின்பவன். உனக்கு என் உடம்பை உணவாகத் தருகின்றேன். என் உடம்பை உண்டு பசியாறுவாய். மகிழ்ச்சியடைவாயாக'' என்று மலர்ந்த முகத்துடன் கூறியது. விண்ணில் பறந்து, நெருப்பை மூன்று முறை வலமாக வந்து தீயில் விழுந்தது. அதன் உடம்பு வெந்தது.

இதனைக் கண்ட வேடன் அதிசயம் அடைந்தான். தனது தொழிலை நினைந்து தன்னை நிந்தித்துக் கொண்டான். ''ஆ! நான் பாதகன். கால முழுவதும் பல வுயிர்களைக் கொன்றேன். தின்றேன். இந்தப் பறவையின் குணம் மலையினும் மாணப் பெரிது. இது பறவையா? நான் மனிதனா? என் வாழ்வு ஒரு வாழ்வா? நான்

செய்த பாவத்துக்கு எல்லையில்லை. நரகங்கூட எனக்குப் போதுமான தாக இராது. இந்தப் புருவினால் நான் உபதேசிக்கப் பெற்றேன். இனி நான் எந்த வுயிரையும் கொல்லமாட்டேன். உயிர்களைக் கொன்று தின்னமாட்டேன். சீசீ இந்த கொடுமைத் தொழில் இந்தக்கணத்துடன் விலகட்டும். நான் செய்த பாவங்களைத் தவஞ் செய்து போக்குவேன்'' என்று கூறித் திருந்தினான். செய்த பாவங் களை நினைத்து வருந்தினான். தன்னிடம் இருந்த கூடுகளையும் வில்லம்பு களையும் உடைத்து எறிந்தான்.

கூட்டிலிருந்து விடுபட்ட பெண் புரு தன் கணவனை நினைத்து அழுதது. ''என் நாதனே! நான் ஒரு போதும் உனக்கு விருப்ப மில்லாததைச் செய்தேனில்லை. நீ என் தவம்: நீ என் வாழ்வு கணவனைப் பிரிந்து வாழ்கின்ற பெண்ணுக்கு நலம் ஏது? வாழ்வு ஏது? இனி நான் வெளியே சென்றால் சகுனத் தடை யென்பார்கள். அதிதி பூஜை செய்து நற்கதியடைந்த உன்னுடன் நானும் வருகின் றேன்'' என்று கூறி புலம்பியது.

''ஐயோ வேடனே! என்கணவனுடைய சிறிய உடம்பு உனக்குப் போதுமானதாக இராது. என்னையும் தின்று சுகமாகப் பசியாறு வாய்'' என்று கூறிப் பெண் புரு தீயில் விழுந்துவிட்டது. இரு புருக் களின் புண்ணிய உயிர்கள் பொன் மேனியுடன் ஒளிமயமான விமா னத்தில் விண்ணுலகம் போயின. இந்த அற்புதக் காட்சியைக் கண்டான் வேடன். அங்கிருந்த காட்டுத் தீயில் விழுந்தான். அவ னுடைய உயிரும் புண்ணிய லோகத்தை யடைந்தது. இப்படி அதிதி பூஜை செய்த புருக்கள் நற்கதியடைந்தன. பிழையை உணர்ந்து திருந்திய வேடனுக்கும் நற்கதி கிடைத்தது. இந்தக் கதையைக் கேட்டவர்களுக்கும் நற்கதி கிடைக்கும்.'' என்று பீஷ்மர் கூறினார்.

## கழுகும் நரியும்

தருமர் ''பாட்டனாரே! இறந்தவர் பிழைத்ததுண்டா? தாங்கள் கண்டிருக்கின்றீரா? அல்லது கேள்விப்பட்டிருக்கின்றீரா?'' என்று வினவினார்.

''பீஷ்மர், ''பார்த்தா! வைதிசம் என்ற நகரத்தில் நிகழ்ந்த இந்த வரலாற்றைக் கேள். ஒரு அந்தணனுக்கு நெடுங்காலந்தவஞ் செய்ததன் பயனாக ஒரு மகன் பிறந்தான். நீண்ட கண்களும் நல்ல அறிவும் அழகும் உடைய மகனை அந்தணன் மிக்க ஆர்வத்துடன் வளர்த்தான். இளமையிலேயே அம்மகன் மரணமடைந்தான். அந்த ணனும் உறவினரும் மாண்டமகனைக்கண்டு ஓ என்று அலறி அழு தார்கள். இறந்த உடம்பை யெடுத்துக்கொண்டு போய் சுடலையில்

வைத்து அழுதார்கள். மகன் பேசிய மழலை மொழிகளையும், அவனுடைய ஆடல் பாடல்களையும் நினைத்து நினைத்து நெஞ்சம் புண்ணுயினுர்கள். பிணத்தைச் சுற்றி உறவினர் நெடுநேரம் கதறியழுது கொண்டிருந்தார்கள்.

ஒருபுறம் கழுகு இருந்தது சிறிது தூரத்தில் ஒரு நரி ஒளிந்துகொண்டிருந்தது. பொழுது போய்விட்டால் கழுகு பிணத்தைத் தின்ன முடியாது: இருட்டினுல் தான் நரி பிணத்தைத் தின்னும். இப்படி ஒன்றுக்கு ஒன்று மாறுபட்ட இயல்புகளையுடையவை.

கழுகு அழுகின்றவர்களிடம், "அறிவில்லாத மனிதர்களே! நீங்கள் ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் மீண்டு வருவரோ? இங்கு ஆயிரம் ஆயிரம் பேர் மாண்டுவந்து மறைந்துபோனுர்கள். உலகத்தில் இன்பமும் துன்பமும் மாறி மாறி வருவன. சேருவதும் பிரிவதும் இயற்கை. அழுகின்ற நீங்களும் பிறர் அழ மாளப் போகின்றீர்கள், கழுகுகளும் பேய்களும் எலும்புகளும் நிறைந்த இந்தச் சுடலையில் நெடு நேரம் இருப்பது நல்லதன்று. இறந்தவன் பிழைக்கப் போவதில்லை. சூரியன் மறைவதற்குள் உங்கள் இருப்பிடம் போய்ச் சேருங்கள்" என்று சொல்லியது.

கழுகின் சொற்களைக் கேட்ட உறவினர் பிணத்தைவிட்டு வாடிய முகத்துடன் திரும்பினுர்கள். ஒருபுறம் வளையில் மறைந்திருந்த நரி வெளி வந்து அவர்களைத் தடுத்துக் கூறத் தொடங்கியது.

"ஏ மூடர்களே உங்கட்குக் கருணையில்லையா? இன்னும் சூரியன் மறையவில்லை. ஏன் அஞ்சுகின்றீர்கள்? இந்த மகன் தெய்வத் திருவருளால் பிழைக்கக் கூடும். முன் இந்த மகனிடம் எத்துணை அன்புடையவர்களாக இருந்தீர்கள். கண்ணை இமை காப்பது போல் காப்பாற்றினீர்கள். எச்சில் இலையை எறிவதுபோல் இவனை எறிந்து விட்டுப் போவது அறிவுடைமையா? இந்தக் குழந்தையிடம் உங்கட்கு அன்பு இல்லையா? விலங்குகளும் பறவைகளும் கூடப் பிள்ளைகளிடம் அன்பு வைக்கின்றனவே? நீங்களோ மனிதர்கள். குலத்தை வளர்க்கும் இந்த மகனைத் தள்ளிவிட்டு எங்கே போகின்றீர்கள்? சிறிது நேரம் இவனுடைய முகத்தைப் பார்த்துக்கொண்டு இருங்கள்." என்று கூறியது. நரியின் வார்த்தையைக் கேட்ட அவர்கள் குழந்தையிடம் சென்றுர்கள்.

(தொடரும்)

## அயல்நாட்டு சந்தா நேயர்களுக்கு

மலேசியா, சிங்கப்பூர் முதலிய நாடுகளிலுள்ள அன்பர்கள் அடுத்து வரும் சௌமிய ஆண்டுச் சந்தா ரூ. 5—00 ரூபாய் ஐந்து பைசா ஐம்பது மட்டும் உடனே மணியார்டர் மூலம் (Money order) அனுப்பி வைக்க வேண்டுகின்றோம். பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டர்களோ, வங்கி உண்டியல்களோ வாங்கியனுப்ப வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறோம்.

வசதியுள்ள அன்பர்கள் மட்டும் பின்னர் குறிப்பிட்டுள்ள அன்பர்களுடன் தொடர்பு கொண்டு அவர்கள் மூலம் சந்தாத் தொகையை அனுப்பிவைக்கலாம்.

1. திரு. K. K. மாணிக்க முதலியார் அவர்கள்.
   44, Gopeng Road, Penang.
2. திரு. G. குழந்தைவேலுத் தேவர் அவர்கள்.
   46, Jalan Chermai, Off. Jalan Raja Muda,
   Kuala Lumpur.
3. திரு. A. S. நாகலிங்கம் அவர்கள்.
   25, Hoover Park, Hose Road, Teluk Anson.

Manager,
THIRUPPUGAL AMIRTHAM OFFICE,
89, Singanna Chetti St., Cnintadripet, Madras-2.

---